SRI K. ANBAZHAGAN : தஞ்சாவூர் மாவட்டத்திலிருக்கும் காவேரிப் பூம்பட்டிணத்தை விரிவு படுத்தி அல்லது அந்த பகுதியை அழகுபடுத்தி ஒரு ஓய்வு விடுதி கட்டப்படும் என்று அண்மையில் தெரிவிக்கப்பட்டது. அது நிறைவேறுமா ? அதுபோல் மதுரை ஜில்லாவில் இருக்கும் சுருளி மலையிலும் ஒரு பிரயாணிகள் விடுதி அமைப்பதற்கு அரசாங்கத்திடம் திட்டம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சுருளிமலையில் இப்பொழுது சில வேலைகள் நடந்துவருகின்றன. காவேரிப்பூம்பட்டிணத்தைப்பற்றி யோசித்துப்பார்க்கவேண்டும். வெளிநாட்டிலிருந்து வருபவர்களுக்கு மட்டும் தான் தங்குவதற்கு இப்பொழுது ஏற்பாடு செய்யப்பட்டுவருகிறது.

*Lands in Lower Bhavani areas affected by seepage*

* 17 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of acres declared as seepage affected in Lower Bhavani area of Coimbatore district during 1958 ;

(*b*) whether any conditions were laid to declare seepage-affected areas; and

(*c*) if so, the details of the same?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 21,121·88 acres.

(*b*) & (*c*) Yes, Sir. A statement * is placed on the table of the House.

*Minimum Wages*

* 18 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஜின்னிங்—அச்சு—ஓட்டல்—தீப்பெட்டி தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்தாகிவிட்டதா ?

(ஆ) அப்படியானல், அதன் விவரம் மேஜைமேல் வைக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (ஆ) இந்தத் தொழில்களுக்குக் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : குறிப்பிட்ட தொழிலாளர்களின் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் எப்பொழுது செய்வார்கள் ? தீப்பெட்டித் தொழிலாளர்களுக்கும், முதலாளிகளுக்கும் ஆங்காங்கே தகராறுகள் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யப்படாதது தான். ஆகவே இந்த குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது தீப்பெட்டித் தொழில்கள் மிகவும் நெருக்கடியான நிலைமையில் இருக்கின்றன. இந்த சமயத்தில் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்தால் அந்தத் தொழில் நசித்துப்போகும். அதனால்தான் இந்த குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்வது சற்று தாமதம் ஆகிறது.

---

* Printed as Appendix I on page 60 infra.